2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண் எம். 8798

கதிர் 13 மதுரை 21—3—75 வெள்ளி மலர்: 42

## போர்டு, பூட்டோ கொடும்பாவிகள் எரிப்பு

ஜபல்பூர், (ம பி) மார்ச் 19—

இங்குள்ள கலெக்டர் அலுவலகம் முன்பு கடந்த திங்கட் கிழமையன்று ஏராளமான மாணவர்கள் குழுமி நின்று—அமெரிக்க அதிபர் ஃபோர்டு, பாகிஸ்தான் பிரதமர் பூட்டோ ஆகியோரது கொடும்பாவிகளைக் கொளுத்தினர்.

பாகிஸ்தானுக்கு அமெரிக்கா ஆயுத சப்ளை அளிப்பதைக் கண்டித்தும் முழக்கங்கள் எழுப்பினர். முன்னதாக பெரும் ஊர்வலமும் நடத்தினர்.

## மைசூர் பல்கலைக்கழக ஆசிரியர்களும் போர்க் கோலம்

மைசூர், மார்ச் 17—

தங்களது கோரிக்கைகளை ஏற்காவிடில், ஏப்ரல் மத்தியில் துவங்கவிருக்கும் பல்கலைக் கழகத் தேர்வுகளைப் பகிஷ்கரிப்போம் என்று மைசூர் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த அரசாங்க மற்றும் தனியார் கல்லூரி ஆசிரியர்கள் எச்சரித்துள்ளனர்.

வேலைப் பாதுகாப்பு, பல்கலைக்கழக நிர்வாகத்தில் பிரதிநிதித்துவம், மானியக்குழு சிபாரிசின்படி ஊதிய விகிதம், தனியார் கல்லூரி ஆசிரியர்களுக்கு நேரடியாக 'செக்'குகள் மூலம் ஊதியப்பட்டுவாடா ஆகிய கோரிக்கைகளை வற்புறுத்துகின்றனர்.

## இந்திய மக்களை வேட்டையாட டாட்டா பிர்லா கூட்டத்தை அவிழ்த்து விட்டனர்

## மக்கள் மீது வரி போட்டுக் கறந்தது அரசு; விலைகளை ஏற்றி வதைத்தனர் முதலாளிகள்

# இந்திய அரசின் மக்கள் விரோத பட்ஜெட்

# தோழர் தினேன் பட்டாச்சார்யா கண்டனம்

புதுடில்லி, மார்ச். 20—

**நிதி மந்திரி சுப்ரமண்யம் சமர்ப்பித்துள்ள பட்ஜெட் மக்களுக்கு விரோதமான, பெருமுதலாளிகளுக்கு ஆதரவான பட்ஜெட்டாகும். நம்முடைய நாட்டு மக்களை ஏகபோக முதலாளிகள் மடைதிறந்த வெள்ளம்போல் பாய்ந்து சூறையாடுவதற்கு வழி வகுக்கும் பட்ஜெட்டாகும். இதனால் பணவீக்கம் மேலும் அதிகமாகும்.**

நிதி மந்திரி போட்டிருக்கும் வரிகள் ஏழையெளிய மக்கள் உபயோகிக்கும் பொருள்களின் விலைகளை பெரிய அளவு அதிகரித்து விடும். காங்கிரஸ் ஆட்சியில் இது ஒரு தீராத நோயாகி விட்டது"—என்று லோக்சபை பட்ஜெட் விவாதத்தின் போது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் தோழர் தினேன்பட்டாச்சாரியா கடுமையாகச் சாடினர்.

தோழர் பட்டாச்சாரியா தொடர்ந்து பேசுகையில் குறிப்பிட்டதாவது:

"இந்திய சர்க்காரின் இந்த பட்ஜெட்டினுல், பொது மக்களுக்கு எந்தவித நன்மையும் இல்லை.

கடந்த 27 ஆண்டுகளாக எத்தனையோ பட்ஜெட்டுகளை சமர்ப்பித்து விட்டனர். இந்த பட்ஜெட்டினுடைய பொருளாதார அருமை பெருமைகளைப் பற்றி நிதி மந்திரி எவ்வளவுதான் வர்ணித்தாலும், பட்ஜெட்டில் கண்டுள்ள எந்தவொரு குறிக்கோளையும் எய்தப்போவதில்லை. இந்த பட்ஜெட்டை சமர்ப்பிக்கு முன்னர், சுதந்திர இந்தியாவின் வரலாற்றில் என்றும் கண்டிராத பொருளாதாரக் கஷ்டங்கள் சென்ற ஆண்டில் ஏற்பட்டன என்றும்—அந்தக் கஷ்டங்களை வீரியமுடன் சமாளித்து விட்டதாகவும் நிதி மந்திரி கூறினர்.

### ஏழை மக்கள் இளைக்க ஏகபோகம் கொழுக்க

அழகாக வர்ணிக்கப்படும் இந்தப் பட்ஜெட்டை உற்று நோக்கினுல் தெரிவது என்ன?

ஏற்கெனவே எந்தெந்தப் பொருள்களின் மீதெல்லாம் வரிப்போடப்பட்டிருக்கின்றனவோ, அதே பொருள்களின் மீது இந்த வருடமும், வரிபோடப்பட்டிருக்கின்றன. இந்த வரிகளில் பெரும் பகுதியும் ஏழை மக்களைத்தான் பாதிக்கும்.

ஏழைகளின் ஆறுதல் பொருள் என்று கருதப்படும் புகையிலைக்கு வரி விதித்திருக்கிருர்கள்.

புகையிலைக்கு வரிப் போட்டால், புகையிலையைக் கொண்டு தயாரிக்கப்படும் பீடி விலை உயரும், சிகரெட் விலை உயரும்; சுருட்டு விலை உயரும்; பொடி விலை உயரும். புண்பட்ட நெஞ்சங்களுக்கு புகையிலையே ஆறுதல் அளிக்கும். அதன் மீது வரியை உயர்த்துவது என்ன நியாயம்?

சர்க்கரைக்கு வரி உயர்த்தப்பட்டுள்ளது. துணிக்குவரி உயர்த்தப்பட்டுள்ளது எதைத்தான் விட்டு வைத்தீர்கள்? மோட்டார் ஸ்பிரிட்டுக்கு லிட்டருக்கு 10 பைசா வரி உயர்த்தியுள்ளீர்கள். அது என்ன ஆடம்பரப் பொருளா? அதன் வரியைக் கூட்டினுல் பஸ் பயணக் கட்டணத்தைக் கூட்டமாட்டார்களா? ஏழை மக்கள் பாதிக்கப்படமாட்டார்களா?

கல்கத்தாவில் பார்த்தேன். டில்லியிலும்கூட அது நடக்கிறது. அதாவது பத்தாயிரக்கணக்கான டாக்ஸி டிரைவர்கள் தங்கள் டாக்ஸி கார்களை விற்கிருர்கள். காரணம், பெட்ரோல் விலை ஏறி விட்டது. தாக்குப் பிடிக்க முடியவில்லை. பெட்ரோல் விலையில் பெரும்பகுதியும் வரிக்காகவே போகிறது.

### வரிகள் அதிகரித்ததால் பணமும் அதிகரிக்கும்

பணவீக்கத்தின் கேடுகளைப்பற்றியும் அதைக்கட்டுப்படுத்தி விலைவாசிகளை ஓரளவு இறக்கி விட்டதாகவும் நிதி மந்திரி கூறிக் கொள்ளுகிருர். ஆனுல் உண்மை என்ன?

இப்பொழுது ரூ. 288 கோடிக்கு வரி விதிக்கப்பட்டிருக்கிறது. இதில் ரூ. 278 கோடி அளவுக்கு மறைமுக வரிகள் மூலம் கிடைக்கப் பெறுவதாகும்.

பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தப் போவதாக லட்சியப் பாட்டுப் பாடிவிட்டு, கடைசியில் பணவீக்கத்தை அதிகரிக்கும்படியான காரியத்தைச் செய்திருக்கிருர்கள். இதை வேண்டுமென்றேதான் செய்திருக்கிருர்கள். இப்படி வரிபோட்டால்தான் விலைகள் ஏறுமென்பதும் விலைகள் ஏறினுல்தான பெரு முதலாளிகளுக்கும் தொழில் முதலாளிகளுக்கும் லாபம் அதிகரிக்கும் என்பதும், விலைவாசிகளெல்லாம் ஏறுவதின் விளைவாக பணவீக்கமும் அதிகரிக்கும் என்பதும் மந்திரிமார்களுக்கு நன்கு தெரியும். இதற்கு முடிவு எங்குதான் இருக்கிறது? இதற்கு முடிவே காணேம்.

ஆதலால்தான் சொல்லுகிரேம் இது மக்கள் விரோத பட்ஜெட் என்று. பெருமுதலாளிகள் நமது நாட்டு மக்களைச் சூறையாட வாசல்களையெல்லாம் திறந்து விட்ட பட்ஜெட் என்று கூறுவதும் இதனுல்தான்.

### பற்றுக்குறை பலமடங்கு

புதுவரிகளையெல்லாம் சுமத்திய பிறகுகூட, பற்றுக்குறை விழத்தான் செய்கிறது. ரூ. 225 கோடி அளவுக்குத்தான் பள்ளம் விழுமென்று மந்திரி கூறுகிருர். மந்திரி அப்படித்தான் குறைத்துக் கூறுவார். ஆனுல் நமது அனுபவம் வேறு. சென்ற ஆண்டுகிடைத்த அனுபவத்தின்படி பார்த்தால் பற்றுக்குறை இரண்டு மடங்கும் விழும்; மூன்று மடங்கு விழும்.

### ருஷ்யா, சீனு நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்போம்

கடந்த 3 ஆண்டுகளாக ஏறிய விலை ஏற்றத்தைப்போல் இந்தியாவைத் தவிர, வேறு எந்தநாட்டிலுமே ஏறவில்லை.

சோஷலிஸ்நாடுகள் பற்றி சில வார்த்தைகள் கூறவிரும்புகிறேன். சோவியத்யூனியனில்பாதாள ரயில்வே போடப்பட்ட நாளிலிருந்து நாளதுவரை, கட்டணம் உயரவே இல்லை.

சீனுவில் அத்தியாவசியப் பண்டங்களின் விலைவாசிகள் உயரவே இல்லை. சோவியத் யூனியனிலும் உணவுப் பொருள்களின் விலைகள் மிகவும் குறைவாகவே உள்ளன. அங்கு ஆடம்பரப் பொருள்களின் விலை அதிகமாக இருக்கலாம்.

ஆனுல் அன்ருடத் தேவைப் பொருள்களின் விலைகளை ஆண்டுதோறும் ஏற்றுவது இல்லை.

அங்கு ஏன் போகவேண்டும்? அண்டை நாடு பாகிஸ்தான். அங்கு 1972-க்கும் 1973-க்குமிடையில் ஏறிய விலைவாசி 12 சதமானமதான். ஆனுல் இந்தியாவிலோ அதேஆண்டில் 28 சதமானத்துக்கும் மேலேயே விலைவாசி ஏறிற்று.

பணவீக்கம் என்பது உலக நாடுகள் அத்தனையிலும் தான் இருக்கிறது என்று இந்திராகாந்தி கூறினர். அப்படியானுல் சோவியத் யூனியனிலும சீனுவிலும் மற்றுமுள்ள சோஷலிஸ்ட நாடுகளிலும் பணவீக்கம் இருப்பதாகக் கூற முடியுமா?

1974 டிசம்பர் 7-ம் தேதி வெளிவந்த "லண்டன எக்கனமிஸ்ட்" பத்திரிகை என்ன கூறுகிறது? கடந்த 7 ஆண்டுகளாக சோவியத்யூனியனில் சில்லறை விலைகள் ஏறவே இல்லையென்றும் சீனுவில் கடந்த 20 ஆண்டுகளாக விலைவாசிகள் ஏறவே இல்லையென்றும், மாஸ்கோ பாதாள ரயில்வே 1955-ல் கட்டப்பட்டபோது என்ன கட்டணம் இருந்ததோ அதே கட்டணம்தான் இன்றும் இருக்கிறது என்றும்" எழுதியது.

இதற்குக் காரணம் என்னவென்று பிரதமரும் நிதிமந்திரியும் கூற முடியுமா? முடியாது. நான் சொல்லுகிறேன். சோவியத் நாடும் சீனுவும் சோசலிசத்தைக் கட்டிக் கொண்டிருக்கிறது. இங்கு இந்திய அரசு சோஷலிசத்தைக் கட்டுவதாகச் சொல்லி, முதலாளித்துவத்தைக் கட்டிக் கொண்டிருக்கிறது.

ஆகவே, அமெரிக்கா உட்பட முதலாளித்துவ உலகத்தில் ஏற்படும் நெருக்கடியிலிருந்து இந்தியா தப்ப முடியாது,

### டாட்டா, பிர்லா கூட்டம் பத்து மடங்கு சொத்து குவித்தது

இந்தக் காலகட்டத்தில் தொழில்களையும் விவசாயத்தையும் இந்தியாவில் வளர்த்துக் கொண்டது டாட்டா கூட்டமும் பிர்லா கூட்டமும்தான்.

13 ஆண்டுகளில தனியார் துறையின் மொத்த மூலதனம் 4 மடங்கு அதிகரித்தது. அதாவது 1960-61 முதல் 1973-74 வரை ரூ 3600 கோடியிலிருந்து ரூ 15,000 கோடியாக அதிகரித்தது.

கடந்த 25 ஆண்டுகளில் டாட்டாவும் பிர்லாவும் 10 மடங்கு மூலதனத்தைப் பெருக்கிக் கொண்டனர்.

உண்மை என்னவென்ருல், முதலாளிகளின் லாபமலை குவிகிறது; தொழிலாளர்களின பங்கு சுருங்குகிறது. கிராமப்புறங்களில் ஒரு வேளைச் சோறுகூட கிடைக்கவில்லை. வறுமை சொல்லி முடியாது.

### கடன் சுமை தாளவில்லை

கிராமப்புறக் கடன்களோ பல ஆண்டுகளுக்கு முன்பே 3000 கோடிக்கு மேல் போயவிட்டது.

நகர்ப்புறங்களில் ரிசர்வ் பேங்க் கணிப்பின்படி அலுவலகங்களில் பணிபுரியும் ஊழியர்களில் சரிபாதிப் பேருக்கு மேல் கடனில் மூழ்கிக் கிடக்கிருர்கள்.

அவர்களுக்கு ஊதியம் போதவில்லை. அரசு ஊழியர் நிலைமையும் அதுதான்.

பஞ்சப்படி பற்றியும் ஊதிய மாற்றம் பற்றியும மத்திய அரசு ஊழியர்களுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகளை இன்னும் நிறைவேற்றவில்லை.

மாநில அரசு ஊழியர்கள், முனிசிபல் ஊழியர்கள், பஞ்சாயத்து ஊழியர்கள், கல்விக்கூட ஊழியர்கள் ஆஸ்பத்திரி ஊழியர்கள் முதலிய எல்லோருக்கும், "மத்திய சர்க்காரே தனது ஊழியர்களுக்குக் கொடுக்க முடியாதபோது, நாங்கள் எங்கிருந்து கொடுக்க முடியும்?"—என்று சாக்கு சொல்லுகிருர்கள். இதே கதையைத்தான் தனிப்பட்ட முதலாளிகளும அளக்கிருர்கள்.

ஊழியர்கள்கேட்பது பிச்சை அல்ல. அவர்களின் சம்பாத்தியத்தைத்தான் அவர்கள் கேட்கின்றனர்.

லோக்சபை ராஜ்யசபை ஊழியர்களுக்குக்கூட, பஞ்சப்படி, ஊதிய உயர்வு கொடுப்பதில்லை. இதற்கெல்லாம் ஒரு முடிவு வேண்டாமா?"—என்றுகேட்டார்.

---

## கட்சி-தீக்கதிர் வளர்ச்சி நிதி

## சென்னையில் ரூ. 30 ஆயிரம்

## இ. எம். எஸ். அவர்களிடம் பி. ஆர். பரமேஸ்வரன்வழங்கினர்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி — தீக்கதிர் வளர்ச்சி நிதிக்காக சென்னை—செங்கை மாவட்டக் குழு குறியளவான ரூபாய் 30 ஆயிரம்—கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் இ எம் எஸ் நம்பூதிரிபாட் அவர்களிடம் அளிக்கப்பட்டது.

இந்த நிதியை, கடந்த 16ந் தேதி புதுவண்ணை அருணுசலேஸ்வரர் கோவில் திடலில் நடந்த நிதியளிப்பு கூட்டத்தில் மாவட்டச் செயலாளர் தோழர் பி ஆர் பரமேஸ்வரன், தோழர் இ எம் எஸ் அவர்களிடம் அளித்தார்.

கட்சியின் மாவட்டக் குழு உறுப்பினர் தோழர் எம் வரதன் தலைமையில் நடந்த இக்கூட்டத்தில் மாநிலச் செயலாளர் ஏ. பாலசுப்ரமண்யம், மாநிலக் குழு உறுப்பினர் வி. பி. சிந்தன் ஆகியோரும் கலந்து கொண்டு பேசினர்.

## உத்திரபிரதேச முதலமைச்சரின் 'கண்டுபிடிப்பு'

லக்னே, மார்ச். 18—

உத்திரப்பிரதேச முதலமைச்சர் பகுகுணு எதிர்க்கட்சி உறுப்பினரை கடுமையாகத் தாக்கிப் பேசவே சட்டமன்றத்தில் பெருங்கூச்சல் கிளம்பியது.

அந்த எதிர்க்கட்சி எம். எல். ஏ.க்கு மூளைக் கோளாறு ஏற்பட்டிருக்கிறது என்றும் அவருக்கு ஓட்டுப் போட்ட மக்களும் மூளைக் கோளாருனவர்கள் என்றும் கூறினர்.

இதனுல் எதிர்க்கட்சி உறுப்பினர்கள இதை ஆட்சேபித்து சத்தம போட்டனர்.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

லீக்கைச் சார்ந்த 6 உறுப்பினர்களும் சட்டமன்றக் கூட்டத்தை பகிஷ்காரம செய்தனர்.

ஊர்வலத்தை எதிர்பார்த்த ஆளுங் கூட்டணி சட்டசபைக் கூட்டத்தை அவசர அவசரமாக கேள்வி நேரத்தை 7நிமிடங்களிலும், மருத்துவம், சமூக நலப் பிரச்சினைகள்மீது 40நிமிடங்களிலும் சுமார் 143 கோடி ரூபாய் செலவாகும் சில திட்டங்கள் மீது 11 நிமிடங்களும் ஆக மொத்தம் 58 நிமிடங்கள் சட்டசபை கூட்டத்தை ஆரம்பித்து விட்டு முடித்துக் கொண்டனர். இந்நேரத்திற்குள் 35 கோரிக்கைகள் வாசித்து எவ்வித விவாதமும் இன்றியே நிறைவேற்றப் பட்டன.



## கேரள சட்டமன்றம் முன்பு ஆர்ப்பாட்ட ஊர்வலம்

திருவனந்தபுரம், மார்ச். 17—

கேரள மாநில ஊழல் மந்திரிகள் ராஜினாமாச் செய்ய வேண்டும் எனக் கோரி பல்லாயிரக் கணக்கானேர் திரண்டு வந்து அரசு தலைமைச் செயலகம முன்பு ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

இந்த ஆர்ப்பாட்டத்திற்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையிலான 5 எதிர்க்கட்சிகள் அறைகூவல் விடுத்திருந்தன. ஆர்ப்பாட்ட ஊர்வலத்திற்கு எதிர்க் கட்சி எம் எல் ஏக்கள் தலைமை தாங்கினர். இன்று நடைபெறும் சட்டசபைக் கூட்டத்தை எதிர்க் கட்சியினர் பகிஷ்காரம் செய்தனர்.

சட்டமன்றம் முன்பு நடைபெற்ற ஆர்ப்பாட்ட கூட்டத்தில் இ. கே. நாயனர், கே. ஆர். கௌரி (மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி), நீலகண்டன், சிவராமபாரதி (சோசலிஸ்ட் கட்சி), கே. எம். மணி (கேரளா காங்கிரஸ்) கங்காதரன் [கேரள தொழிலாளர் கட்சி) ஆகியோர் பேசினர். எதிர்க் கட்சியினரை தாக்கிய போலீஸ் அதிகாரிகளை சஸ்பெண்ட் செய்துவிட்டு அவர்கள்மீது விசாரணை நடத்த வேண்டும் என அவர்கள் வற்புறுத்தினர்.

இன்றைய சட்டசபை கூட்டத்திற்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையிலான 5 எதிர்க்கட்சிஉறுப்பினர்களும் பொன்னம்மா ஜேகப், ஹைட்ராஸ்ஹாஜி என்ற இரு சுயேச்சை உறுப்பினர்களும் முஸ்லிம்

(2-ம் பத்தி பார்க்க)

# தீக்கதிர்

## பிரஜா உரிமைகளைப் பெற ஏப்ரல் 6-ல் அணி திரள்வீர்

யுத்த காலத்திற்கென்று பிரகடனம் செய்த "அவசர நிலைமை"யை இந்திரா காங்கிரஸ் ஆட்சி வருடக்கணக்காய் இன்னும் நீடித்து அமுலில் வைத்திருக்கிறது. இந்திய பாதுகாப்புச் சட்ட விதிகளும் நாட்டின் நிரந்தரச் சட்டங்களில் ஒன்றாய் விட்டது. இது போதாதென்று உள்நாட்டு பாதுகாப்புச் சட்டங்கள் வேறு சிருஷ்டிக்கப்பட்டு அமுலில் உள்ளன. இந்த ஜனவிரோதச் சட்டங்களைத் தும மக்களைத் தாக்குவதற்கு அன்றும் இந்தியா முழுவதும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஆளுங் காங்கிரஸ் கட்சியையும் அதனது அரசையும் எதிர்க்கும் சக்திகளின் சாதாரண ஜனநாயக உரிமைகளையும் பிரஜா உரிமைகளையும், கூட பறிப்பதற்கு இந்த சட்டங்கள் நிர்தாட்சணியமாய் பிரயோகிக்கப்படுகின்றன.

கடந்த நான்கு வருடங்களுக்கு மேலாகக் காங்கிரஸ் மத்திய அரசின் இந்தக் கொடிய தாக்குதல்களுக்கு இந்திய (மார்க்சிஸ்ட்) கம்யூனிஸ்டு கட்சி பிரதான இலக்காக இருந்து வந்துள்ளது. குறிப்பாக மேற்கு வங்க மாநிலத்தில் மார்க்சிஸ்ட் கட்சி ஆட்சிக்கு வந்துவிடாமல் தடுக்க வாக்குரிமையே பறிக்கப்பட்டதும் அங்கு நிலவும் அரை பாசிஸ்ட பயங்கரத்தில் நூற்றுக்கணக்கில் மார்க்சிஸ்ட் கட்சியினர் படுகொலை செய்யப்பட்டுள்ளதும் விசாரணையின்றி சிறையிலடைக்கப்பட்டுள்ளதும் இன்று நாடறிந்த உண்மை. மக்களின் ஜனநாயக உரிமைகளை மீண்டும் பரிபூரணமாக வழங்கப்படுவதற்கும் அடக்குமுறையை எதிர்த்தும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி விடாது குரலெழுப்பி வந்துள்ளது.

இந்த நிலையில், "அவசர நிலைமை"யையும், இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தையும், உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டங்களையும் ரத்து செய்யக் கோரும் ஆர்ப்பாட்ட தினமாக வருகிற ஏப்ரல்-6-ம் தேதியன்று மக்களின் ஆதரவைப் பெருமளவுக்குத் திரட்ட வேண்டுமென்று திரு. ஜெயப் பிரகாஷ் நாராயணன் ஒரு அறைகூவல் விடுத்துள்ளார். இந்த அறைகூவலுக்குத் தமது (மார்க்சிஸ்ட்) கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியகமிட்டி தனது பரிபூரண ஆதரவைத் தெரிவித்துள்ளது. 6—4—75 அன்று நடக்கும் ஊர்வலம், பொதுக்கூட்டம் முதலியன சிறப்பாக நிகழ்வதற்கு, இதர அரசியல் கட்சிகள், குழுக்கள், பிரமுகர்கள், வெகுஜன ஸ்தாபனங்கள் முதலிய அனைவருடனும் சேர்ந்து நிறைவேற்றும் நடவடிக்கைகளாக இதைச் செய்ய சகல முயற்சிகளையும் மார்க்சிஸ்ட் கட்சி மேற்கொள்ளும்.

திரு. ஜெயப்பிரகாஷ் நாராயண் இதுவரை நடத்தி வந்துள்ள இயக்கம் சம்பந்தமாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அனுசரித்து வந்துள்ள கொள்கையும் நடைமுறையும் அனைவரும் அறிந்ததே. திரு ஜெயப்பிரகாஷ் தலைமையில் நிறுவப்பட்டுள்ள அகில இந்திய இணைப்புக் கமிட்டியில் மார்க்சிஸ்ட் கட்சி அங்கம் வகிக்கவில்லை. அந்தக் கமிட்டி பிரகடனப்படுத்தியுள்ள குறிக்கோள்களனைத்திற்கும் அரசியல் கருத்தோட்டங்களுக்கும் மார்க்சிஸ்ட் கட்சி தனது ஆதரவை நல்கவில்லை.

ஆனால் — காங்கிரஸ் சர்க்காரை எதிர்த்து ஜே. பி. யின் இயக்கம் முன்வைத்துள்ள ஜனநாயக ரீதியான கோரிக்கைகளை, ஒரு கட்சி சர்வாதிகாரத்தையும் போலீஸ் ஆட்சியையும் நோக்கி காங்கிரஸ் அரசு செல்லும் போக்கினை எதிர்த்து எழுப்பியுள்ள கோஷங்களை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரிக்கிறது. ஜே பி யின் இயக்கம் ஒரு பிற்போக்கான பாசிஸ்ட் இயக்கம் என்று இந்திரா காங்கிரசும் வலது கம்யூனிஸ்டுகளும் அவதூறு செய்வதை மார்க்சிஸ்ட் கட்சி நிராகரிக்கிறது. மார்க்சிஸ்ட் கட்சி ஜே. பி.யின் இயக்கத்துடன் ஸ்தாபன ரீதியாக ஒருங்கிணைந்து செயல்படாவிட்டாலும் அந்த இயக்கத்தில் காணப்படும் ஜனநாயக கோரிக்கைகளுக்காக, மார்க்சிஸ்ட் கட்சி தனியாக தனது சுயகட்சி மேடையில் இயக்கம் நடத்தி வந்துள்ளது.

இப்போது ஏற்பட்டுள்ள நிலையில் தொழிலாளி வர்க்கக் கட்சியான மார்க்சிஸ்ட் கட்சி மட்டுமின்றி, இந்திரா காங்கிரசுடன் உடன்படாத எல்லா எதிர்க்கட்சிகளும் தாக்குதல்களுக்கு உட்படுத்தப்பட்டு வருகின்றன. பிரஜா உரிமைகளைப் பெற அவர்களும் போராட முன்வர கோரப்பட்டுள்ளது.

6—4—75 ஆர்ப்பாட்டத்திற்கு திரு ஜெயப்பிரகாஷ்நாராயண் தற்போது முன்வைத்துள்ள கோரிக்கைகள் — அவசர நிலைமை, இந்தியப் பாதுகாப்புச் சட்டம், உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டங்கள் இவற்றை ரத்து செய்ய வேண்டுமென்ற ஒரு பிரஜா உரிமைப் பிரச்சினை சம்பந்தமானது மட்டுமே ஆகும். இந்தக் கோரிக்கைகளை வெல்வது அனைவருக்கும் முக்கியமானது. இந்தப் பிரச்சினையில் வெற்றிகாண எல்லோரோடும் மார்க்சிஸ்ட் கட்சி ஒத்துழைக்கும். இந்த வெற்றி இடதுசாரிக் கட்சிகளுக்கு முக்கியமான வெற்றியாகத்திகழும் என்பதில் சந்தேகமில்லை.

இத்தகையதொரு பொதுவான பிரச்சினையில் அனைவரும் ஒத்துழைப்பார்களென்று நம்புகிறோம். இதை சாத்தியப்படுத்தும் வகையில் இயக்கத்தின் கட்டுக்கோப்பை இம்மியளவும் மீறக்கூடாது. இது ஒரு திட்டத்தின் அடிப்படையில் ஏற்படும் ஐக்கிய முன்னணி அல்ல. பிரஜா உரிமைக்கு மட்டும் எல்லாக் கட்சிகளும் ஸ்தாபனங்களும் சேர்ந்து இயங்கும் ஒரு மேடையாக மட்டுமே அது விளங்க வேண்டும்.

இவ்வாறு ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட்படுத்தப்பட்ட இயக்கத்தில் பங்கு கொள்வதனால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தனது மற்ற ஜனநாயகத் திட்டத்தையும், இடதுசாரி, ஜனநாயக சக்திகளின் ஐக்கியம் என்ற அரசியல் கொள்கையையும் விட்டுவிடவில்லை. இதர கட்சிகளும் அவரவர் கொள்கைகளை விட்டுக்கொடுக்க வேண்டுமென்று கேட்கவும் இல்லை. அனைவரும் சேர்ந்து காங்கிரசை எல்லா பிரச்சினைகளிலும் எதிர்க்கும் அணி அல்ல இது. அவ்வாறு இதை மாற்றவும் கூடாது.

காங்கிரஸ் அரசின் ஜனவிரோதபோக்கை எதிர்த்து [illegible]

---

★ தமிழகம் முழுதும் கட்டாய ரேசன் ★ வறட்சிப் பணிகளை துரிதப்படுத்தல்

★ சம வேலைக்கு சம கூலி ★ மத்தியரசு ரூ 25 கோடி நிவாரண நிதிஉதவி

★ சர்வகட்சி கண்காணிப்புக் குழு—கோரிக்கைகளுக்காக

# உண்ணாவிரதக் கிளர்ச்சி

## 3 தாலுகாக்களில் 2562பெண்கள் பங்கேற்பு

தஞ்சாவூர், மார்ச். 19—

வறட்சி நிவாரணப் பணிகளை துரிதமாக தமிழக அரசு மேற்கொள்ளக் கோரியும், தமிழகத்துக்கு வறட்சி நிவாரண நிதியாக குறைந்தபட்சம் ரூ 25 கோடி தரும்படி மத்திய அரசை வற்புறுத்தியும் வறட்சிப் பணியில் ஈடுபடுத்தப்படும் தொழிலாளர்களுக்கு — ஆண், பெண் என்ற பாகுபாடின்றி குறைந்தபட்சம் ரூ. 5 கூலி வழங்க கோரியும், கட்டாய ரேஷனை மாநிலம் முழுவதும் அமுலாக்கக் கோரியும் — சர்வ கட்சி கண்காணிப்புக் குழுக்கள் அமைக்க கோரியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் அதன் வர்க்க ஸ்தாபனங்களும் தொடர்ந்து வற்புறுத்தி வருகின்றன.

இக்கோரிக்கைகளை ஏற்று அமுலாக்கும்படி மாநில மத்திய அரசுகளை நிர்ப்பந்திப்பதற்காக பொதுமக்களின் ஆதரவைத் திரட்டுவதற்கு 3 நாள் உண்ணாவிரதக் கிளர்ச்சி மாநிலம் முழுவதும் நடந்தது. பல்லாயிரம் பேர் இதில் பங்கேற்றனர்.

14-ந் தேதியன்று விவசாயிகள், விவசாயத்தொழிலாளர்கள் அணியும்,

15-ந் தேதியன்று ஜனநாயக மாதர் சங்கத்தைச் சார்ந்த பெண்கள் அணியும்,

16-ந் தேதியன்று அனைத்துத் தொழில்களிலும் பணிபுரியும் சி ஐ டி யூவைச் சார்ந்த தொழிலாளர் அணியும் உண்ணாவிரதம் மேற்கொண்டன.

தஞ்சை மாவட்டத்தில் மட்டும் — இதுவரை வந்த செய்திகளின்படி 3 தாலுகாக்களில மட்டும 43 இடங்களில் 2562 பெண்கள் 15-ந் தேதி உண்ணாவிரதத்தில் கலந்து கொண்டனர்.

நாகைத் தாலுகாவில் மட்டும் 31 இடங்களில் உண்ணாவிரதம நடந்தது.

இந்த இடங்களில் உண்ணாவிரதம் இருந்த தோழர்களை — ஜனநாயக மாதர் சங்கச் செயலாளர் பாப்பா உமாநாத், தாலுகா அமைப்பாளர் தமிழரசி, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாவட்டச் செயலாளர் கே. ஆர். ஞானசம்பந்தன், தாலுகா செயலாளர் எம செல்லமுத்து ஆகியோர் — நேரில் சந்தித்து வாழ்த்து தெரிவித்தனர்.

### நாகை தாலுகா

திருவாரூரில் 27பேர், அளிவலத்தில் 27, தப்பளாம் புலியூரில் 16, ஆந்தக்குடியில் 20, புலிவளத்தில் 33, கொட்டாரக்குடியில 38, மாங்குடியில் 44, மாவூரில49, புதூரில் 42, வலிவலததில் 97, சாட்டியக்குடியில 47, சிள்ளுக்குடியில 81, ஏரவைக்காடில் 122, திருக்குவளையில 60, எட்டுக்குடியில் 63, ஆலங்குடியில் 42, கீழையூரில் 42, வழக்கரையில் 134, கருங்கண்ணியில் 66, திருப்பூண்டியில் 77, வேளாங்கண்ணி 10?, கருவேலங்குடியில்41, சிக்கலில 30, தேமங்கலத்தில் 69 பட்டமங்கலத்தில் 134, தேவூரில் 43, அய்யடிமங்களத்தில் 47, நர்கூரில 39, நாகையில் 12, கீவலூரில் 40பேர், செம்பியமகாதேவியில் 47 பேரும் உண்ணாவிரதம் இருந்தனர்.

### நன்னிலம் தாலுகா

நன்னிலத்தில்73, போளத்தில் 45, குடவாசலில75பேர் உண்ணாவிரதம் மேற்கொண்டனர்.

### திருத்துறைபூண்டி

திருத்துறைப்பூண்டி தாலுகாவில,

திருத்துறைப்பூண்டியில் 47. பொன்னிரையில் 52. ஆலத்தம்பாடியில் 51. இடும்பாவனத்தில் 35, ஆயக்காரம்புலத்தில் 60, வேதாரண்யத்தில் 29, கச்சனத்தில் 33, கொளப்பாடில்43. தலைஞாயிறில் 26பேரும் உண்ணாவிரதத்தில் ஈடுபட்டனர்.

### திண்டுக்கல்

திண்டுக்கல் நகரில் கடந்த 15, 16-ந் தேதிகளில் நடந்த உண்ணாவிரதக் கிளர்ச்சிகளில் ஏராளமான மாதர்களும், சிஐடியூ தொழிலாளர்களும் கலந்து கொண்டனர்.

### பெண்கள் அணி

பெண்கள் அணி 15-ந் தேதிகாலை 7மணிமுதல்மாலை 7 மணி முடியஉண்ணாவிரதம் மேற்கொண்டன. திண்டுக்கல் நகர் 1-வது வார்டில் சண்முகவல்லி தலைமையில் 13 மாதர்கள் உண்ணாவிரதம் மேற்கொண்டனர். தோழர் என். வரதராஜன் முடித்துவைத்தார்.

வடபகுதி சத்திரம் தெருவில் பாலாமணி தலைமையில 9 மாதர்கள் மேற்கொண்டனர் வி. எஸ். எம் மரைக்காயர் முடித்துவைத்தார்.

யாதவ மேட்டுராஜபட்டியில் முனியம்மாள்தலைமையில் 9 மாதர்கள் மேற்கொண்டனர்.

தெற்கு ரதவீதியில் மாரியம்மாள தலைமையில் 8 பேர் மேற்கொண்டனர். எஸ். ஏ. தங்கராஜன் முடித்து வைத்தார்.

மேட்டுப்பட்டியில் வீரம்மாள் தலைமையில் 19 மாதர்கள் மேற்கொண்ட உண்ணாவிரதத்தை சார்லஸ் முடித்து வைத்தார்.

### சி ஐ டி யூ அணி

சின்னாளபட்டியில் கவுண்டையா தலைமையில் 7 சி ஐ டி யூ தோழர்கள் 15-ந் தேதி உண்ணாவிரதம் மேற்கொண்டனர்.

சிஐடியூ தோழர்கள் 16-ந் தேதிகாலை 7 மணிமுதல்17-ந் தேதி காலை 7 மணி முடிய 24 மணிநேர உண்ணாவிரதம் மேற்கொண்டனர்.

நாகல் நகர்ப் பகுதியில் மின்சார தொழிலாளர் தலைவர் இ. எஸ். சுந்தரம் தலைமையில் 17 பேர் மேற்கொண்டனர்.

மேட்டுராஜபட்டியில் பி- அம்மாவாசைத் தேவர் தலைமையில் 30 பேர் மேற்கொண்டனர். எஸ். ஏ. தங்கராஜன்முடித்துவைத்தார்.

வடபகுதி சத்திரம் தெருவில் வி எஸ் எம் மரைக்காயர் தலைமையில் 15 பேரும், தெற்குப் பகுதியில் எஸ் ஏ தங்கராஜன் தலைமையில் 10 பேரும் மேற்கொண்டனர். மேட்டுப்பட்டியில்பி ஏ தாஸ் தலைமையில் 20பேர் மேற்கொண்டனர். என் வரதராஜன் முடித்து வைத்தார்.

17-வது வார்டில் ஏ முனுசாமி தலைமையில் 12 பேர் மேற்கொண்டனர். எம் ராமசாமி முடித்து வைத்தார்,

### விவசாயிகள் அணி

வேடசந்தூர் தாலுகா அய்யலூரில் பி கே பழனியாண்டி தலைமையில் 5 பேர் 24 மணி நேர உண்ணாவிரதம் இருந்தனர். ஆர் ராமசாமி முடித்து வைத்தார்.

குஜிலியம்பாறையில் தாலுகா விவசாயிகள் சங்க செயலாளர் எம் மாரிமுத்து தலைமையில 8 பேரும் மின் தொழிலாளர் 8 பேரும் உண்ணாவிரதம் இருந்தனர்.

### மின்சாரத் தொழிலாளர்

அய்யலூரில் 16-ந் தேதி அச்சப்பன் தலைமையில் 12 பேர் மேற்கொண்டனர். ஆர் ராமசாமி முடித்து வைத்தார்.

சின்னாளபட்டியில் ஆறுமுகத்தாண்டவன் தலைமையில் 7 பேர் மேற்கொண்டனர்.

### பழனியில்

இங்கு பி கே கருப்புசாமி தலைமையில் விவசாயிகள் அணியும, துரையம்மாள் தலைமையில் மாதர் அணியும் வெங்கடேசன் தலைமையில் சி ஐ டி யூ அணியும் உண்ணாவிரதம் மேற்கொண்டன.

ஒட்டன்சத்திரத்தில் கே எஸ் பழனிமுத்து, தலைமையில் விவசாயிகள் அணியும் மாதுரி தேவி தலைமையில மாதர் அணியும, அந்தோணி தலைமையில் தொழிலாளர் அணியும் மேற்கொண்டன.

---

## மின்சார ஊழியர்கள் 'தர்ணா'

சென்னை, மார்ச். 18—

தமிழ்நாடு மின்சார ஊழியர்கள் மத்திய அமைப்பின் (சி ஐ டி யூ) தலைமையில் இன்று சென்னையில் மின்சாரத் தொழிலாளர்கள், உழைப்பாளர் சிலையருகே அமர்ந்து தர்ணா நடத்தினர்கள்.

குறைந்தபட்ச சம்பளம் ரூ 450 கோரியும் பஞ்சப்படியைப் புள்ளிக்கு 1-75 வீதம கணக்கிட்டுத் தரக்கோரியும் இததர்ணா நடத்தப்பட்டது.

'தர்ணா' ஆரம்பிக்கும் முன்பு 500க்கும் மேற்பட்ட மின்சாரத் தொழிலாளர்கள் கோரிக்கைகளை வலியுறுத்தி கோஷமிட்டனர். சட்டசபையைச் சுற்றி தடை உத்தரவு போடப்பட்டு இருப்பதாகக்கூறி போலீசார் ஊர்வலத்தை தடுத்து நிறுத்தினர் எனவே, தொழிலாளர்கள், உழைப்பாளர் சிலைபருகே அமர்ந்து தர்ணா நடத்தினர்.

பின்பு மாலை ஊர்வலமாக மின்சார அலுவலகத்தை அடைந்தனர்.

---

## டெல்லியில் ஆசிரியர்கள் பேரணி

புதுடெல்லி, மார்ச். 18—

கடந்த சனிக்கிழமை 5 ஆயிரத்துக்கும் மேற்பட்ட டெல்லி உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்கள் போட் கிளப்பில் பெரும் பேரணியை நடத்தினர்.

பள்ளித் தலைமை ஆசிரியருக்கும் ஏனைய ஆசிரியர்களுக்குமிடையே உள்ள சம்பள வேறுபாடுகள் நீக்கப்பட வேண்டும், 6 வருட சர்வீஸுக்குப்பின் அனைத்து பிரிவு ஆசிரியர்களுக்கும் தேர்வு உயர்வு அளிக்க வேண்டும போன்ற கோரிக்கைகளை வற்புறுத்தியே இப்பேரணி நடத்தப்பட்டது.

---

57 ஆண்டுகாலமாக பாடுபடும்

## விவசாயிகளை வெளியேற்ற நிலப்பிரபுக்கள் சதி

மேலூர், மார்ச். 17—

மேலூர் தாலுகா பதினெட்டாம் குடிபகுதியில் நில வெளியேற்றம் செய்யப்படும் அக்கிரமத்தை எதிர்த்து அப்பகுதி விவசாயிகள் கிளர்ந்தெழுந்துள்ளனர்.

புதுக்கோட்டை, தேவகோட்டை, காரைக்குடி விருதுநகர், அமராவதி புதூர், குன்னக்குடி ஆகிய ஊர்களைச் சார்ந்த நிலச்சுவான்தார்களுக்கு இங்கு சுமார் 750 ஏக்கர் நஞ்சை நிலம் உள்ளது.

சர்க்கார் நஞ்சைத் தரிசாக இருந்த இந்த நிலங்களை ஏலத்தில ஏக்கர் ரூ. 30, ரூ 20 என்று 1918-ல் எடுத்தார்களாம். அந்த 1918-ம் வருடம் முதல் பாரம்பரையாக இன்றுவரை குத்தகைக்கு விவசாயம் செய்து வரும் பதினெட்டாங்குடி விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்றும் நோக்கத்துடன் — குத்தகை நெல் பெற்றுக் கொண்டதற்கு ரசீது கொடுக்கவும் — அடங்களில் பதியவும் மறுத்துவருகிறார்கள்.

இந்த அக்கிரமத்தை எதிர்த்து அப்பகுதி குத்தகை விவசாயிகள் மார்க்சிஸ்ட் கட்சி, விவசாயிகள் சங்கம் ஆகியவற்றின் கீழ் அணிதிரண்டு போராடி வருகிறார்கள்.

கடந்த 11-ந் தேதியன்று இங்கு விவசாயிகள் சங்க அமைப்புக் கூட்டம் முத்தழகு தலைமையில் நடந்தது. க. ம மொண்டியை கன்வீனராகவும் சி. மொ. மொண்டி, பெ. முத்தழகு, வீ. நாராயணன், மூக்கன் அம்பலம, ம. மொண்டி, சி. முத்துபுலியன் ஆகியோரை உறுப்பினர்களாகவும் கொண்ட அமைப்புக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.

விவசாயிகள் சங்கம் அமைக்கவேண்டியதின் அவசியத்தையும், ஒன்றுபட்ட போராட்டத்தின் வலிமையையும் விளக்கி தோழர்கள் மு. அழகர்தாஸ், கி ராமசாமி, மு, அய்யாவு, வீ, குருசாமி ஆகியோர் பேசினர்.

---

## தமிழகத்தில் மதுலிமாயி சுற்றுப்பயணம்

கோவை, மார்ச். 18—

சோசலிஸ்ட் கட்சி தலைவரும் நாடாளுமன்ற உறுப்பினருமான மதுலிமாயி தமிழகத்தில் இம்மாத இறுதியில நான்கு நாட்கள் சுற்றுப்பயணம மேற்கொள்கிறார்.

27ந்தேதி தஞ்சை, கும்பகோணம், 28ந் தேதி திருச்சி மதுரை. 29ந்தேதி கோவை, ஈரோடு, 30ந் தேதி சென்னை காஞ்சிபுரம் ஆகிய இடங்களுக்குச் செல்கிறார்,

இவருடன் அக்கட்சியின் மாநிலத் தலைவர் ப. சு. சின்னத்துரை, செயலாளர் என். எஸ், சதாசிவன் ஆகியோரும் கலந்து கொள்வர்.

---

## தங்க வேலை தொழிலாளர்கள் சங்கம் சேருகிறார்கள்

கோவை, மார்ச் 18—

கோவைப் பகுதியில், தங்கவேலையில் ஈடுபட்டு வரும் தொழிலாளர்கள் சங்கம் அமைக்கிறார்கள்.

கடந்த 16ந் தேதியன்று சித்தி விநாயகர் கோவில மண்டபத்தில் நடந்த பேரவைக் கூட்டத்தில் ஏராளமான தொழிலாளர்கள் கலந்து கொண்டனர். டி கே தங்கமணிதலைமைவகித்தார்.

சங்கம் அமைக்கவேண்டியதன் அவசியம்குறித்தும், ஒன்றுபட்ட போராட்டத்தின் மகிமை பற்றியும் ஏ கே கோபாலன. சி கே சீதரன், கே கேளு, சுரேந்திரன், ஜெனரல ஒர்க்கர்ஸ் யூனியன (சி ஐ டி யூ) செயலாளர் எம் ஏ பாபு பேசினர்.

பின்னர் ஏ எம் இலட்சுமணனை கன்வீனராகக் கொண்ட 15 பேர் அடங்கிய அமைப்புக்குழு அமைக்கப்பட்டது.

---

## குமரிமாவட்ட கலெக்டர் ஆபீசில் ஆர்ப்பாட்டம்

நாகர்கோவில், மார்ச் 19—

காரிமணி தோட்டத் தொழிலாளர் பிரச்னையில் தலையிட்டு சுமுகத் தீர்வு காணுமாறு வற்புறுத்தி குமரி மாவட்டக் கலெக்டர் அலுவலகம் முன்பு அண்மையில் பெரும் ஆர்ப்பாட்டம் நடந்தது. இதில் பஞ்சாலை, மின்சாரம், போக்குவரத்து ஆகியவற்றைச் சார்ந்த தொழிலாளர்கள் கலந்து கொண்டனர்.

இந்த ஆர்ப்பாட்டத்துக்கும், முன்னதாக வெட்டூர்ணிமடத்திலிருந்து புறப்பட்ட ஊர்வலத்துக்கும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாவட்ட, நகரச் செயலாளர்களான தோழர்கள் பி. திவாகரன், கே. வேலாயுதம் ஆகியோர் தலைமை வகித்தனர்.

ஆர்ப்பாட்ட இறுதியில் தோழர் மோகனசந்திரன் பேசினார்.

### ஆதரவு கூட்டங்கள்

தடிக்காரன் கோணம் பகுதியில் போலீஸ் அட்டகாசத்தைக் கண்டித்தும், காரிமணி தோட்டத் தொழிலாளர்களது போராட்டத்தை ஆதரித்தும், பல ஆண்டுகளாக வேலை செய்துவரும் தொழிலாளர்களுக்கு வேலை மறுக்கப்பட்டு புதுத் தொழிலாளர்களை வேலையில் அமர்த்த நிர்வாகத்துக்கு போலீஸ் பாதுகாப்பு தருவதைக் கண்டித்தும், போராடும் தொழிலாளர் மீது போலீஸ் செய்துவரும் கெடுபிடியைக் கண்டித்தும் பல இடங்களில் பொதுக்கூட்டங்களும் நடந்தன.

தடிக்காரன் கோணம் தோழர் அப் தலைமையிலும் 28ந்தேதி சுருளோட்டில் எம் என் சிவானந்தன் தலைமையிலும் நடந்த கூட்டங்களில் தோழர்கள் ஜெ ஹேமச்சந்திரன், பி திவாகரன் பி பெருமாள், என் அச்சுதன், முஸ்தபா, தாமஸ் பேசினர்.

---

வேலையில்லா டாக்டர்களுக்கு வேலை தராவிடில் 21-ந் தேதி முதல்

இளம் டாக்டர்கள், மாணவர்கள் 10 ஆயிரம் பேர்

# காலவரையற்ற வேலைநிறுத்தம்

மதுரை, மார்ச் 19—

வேலையில்லாத டாக்டர்களுக்கு உடனடி வேலை வாய்ப்பு அளிக்கக்கோரி தமிழகம் முழுவதும பெண்கள் உட்பட இளம் டாக்டர்களும் மருத்துவக் கல்லூரி மாணவ — மாணவியரும் (நேற்று) அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்.

தங்களது கோரிக்கைகளை ஏற்காமல் மேலும் பிடிவாதம் செய்தால் வருகிற 21-ந் தேதி முதல் காலவரையற்ற வேலை நிறுத்தத்தில் இறங்குகிறார்கள்.

இளம் டாக்டர்கள் என்று அழைக்கப்படும்— பயிற்சி டாக்டர்கள் (ஹவுஸ் சர்ஜன), பட்டமேற்படிப்பு டாக்டர்கள், சீனியர் ஹவுஸ் சர்ஜன்கள், உள் மருத்துவர்களுமாக (ரெசிடென்சியல் இண்டர்னி) தமிழகம் முழுவதும் 2000-க்கு மேற்பட்ட டாக்டர்களும், அவர்களுக்கு ஆதரவாக சுமார் 8000 மருத்துவக் கல்லூரி மாணவர்களும் இந்த வேலை நிறுத்தத்தில முழுமையாகக் கலந்து கொண்டனர்.

மற்றும், இன்றுள்ள விலைவாசிக்கேற்ப — பயிற்சி மருத்துவர்களுக்கும் உள் மருத்துவர்களுக்கும் உதவித் தொகையை உயர்த்தித்தர வேண்டும் என்றும், ஏனைய மாநிலங்களில் தரப்படுவது போல தமிழகத்திலும் பட்ட மேற்படிப்புமாணவர்களுக்கு உதவித் தொகை வழங்க வேண்டும் என்றும் இவர்கள் வற்புறுத்துகின்றனர்.

ஏற்கனவே அரசுக்கும் அதிகாரிகளுக்கும் கோரிக்கை மகஜர்கள் அளித்திருந்த போதிலும் எவ்வித நடவடிக்கையும் இல்லாததால் தங்களது கோரிக்கைகளை வற்புறுத்தும் பொருட்டும் பொது மக்களுக்கு கோரிக்கைகளை விளக்கி ஆதரவு திரட்டும் பொருட்டும் கடந்த 15-ந் தேதியன்று தமிழகம் முழுவதும் இளம டாக்டர்களும், மருத்துவ மாணவர்களும் கோரிக்கை தினம் அனுஷ்டித்தனர். அன்று கோரிக்கை அட்டைகள் அணிந்து வேலைக்கும், வகுப்புக்கும் சென்றனர்.

இனியும் அரசாங்கம் வாளாவிருந்தால், வருகிற 21-ந் தேதி முதல் காலவரையற்ற வேலை நிறுத்தத்தில் இறங்கப்போவதாக அறிவித்துள்ளனர்.

### மருத்துவ வசதி மீறப்படுவதா?

கோரிக்கைகளை ஏற்காது அரசும், நிர்வாகமும் மெத்தனப் போக்கில் நடந்து கொள்கின்றன.

டாக்டர்களது வேலை நிறுத்தத்தைச் சமாளிப்பதற்காக, மதுரையிலும், பிற இடங்களிலும் நோயாளிகளுக்கு சிகிச்சை அளிப்பதில் மருத்துவ விதி மீறப்படுகிறதாம்.

ஊசி போடப்பட வேண்டிய நோயாளிகளுக்கு ஊசி போடாமல் வெறும் மாத்திரைகளை தரப்படுகிறதாம. அவசியம் ஊசி போட்டுத்தான் ஆக வேண்டியவர்களுக்கு டாக்டர்கள் ஊசி போடாமல்—ஸ்டாப் நர்சுகளை ஊசி போடச் செய்கின்றனராம்.

புதிய நோயாளிகள் அனுமதிக்கப்படுவது பெருமளவில் குறைக்கப்படுகின்றதாம்.

அறுவை சிகிச்சை செய்யப்பட வேண்டியவர்களுக்கு அறுவை சிகிச்சை செய்யாமலும், ஏற்கனவே சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டுள்ளவர்களும 'டிஸ்சார்ஜ் செய்யப்பட்டு வீடுகளுக்கு அனுப்பப்படுகிறார்களாம் அவசரக் கேஸ்கள் மட்டுமே அனுமதிக்கப்பட்டு ஆபரேசன் செய்யப்படுகின்றனவாம்.

### ஆதரவு தருக

தங்களது கோரிக்கைகளையும் — பல்லாயிரக்கணக்கான ரூபாய் செலவில் படித்து டாக்டர் பட்டமும் பெற்றபின்பு ஒன்றரை வருட காலத்துக்கும் மேல் வேலையின்றி தவிக்கும் தங்களது அவல நிலையையும் பொதுமக்களுக்கு விளக்கி ஆதரவு திரட்டும் பொருட்டு மதுரையிலும் பிற இடங்களிலும் மருத்துவமனை வாயில்களில் துண்டுப்பிரசுரங்களை விநியோகித்தனர். நகர் முழுவதும், சுவரொட்டிகள் காணப்படுகின்றன. பொது மக்களின் ஆதரவும் பெருகி வருகிறது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழுசார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு, மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.